# 1

# இனி வேண்டியதில்லை

"**கா**ரில் வெளியே போனது பிரகாஷ் ராவ்தானா?" என்று சந்தர் மீண்டும் கேட்டான்.

"நானும் யாரோ என்றுதான் இருந்தேன். அவனேதான்" என்றாள் சுஜாதா.

சந்தர் அந்த இரும்பு மடக்கு நாற்காலியில் வேறுபக்கம் பார்த்துத் திரும்பி உட்கார்ந்து கொண்டான். சென்ற முறை அந்த சினிமா ஸ்டூடியோவுக்கு வந்திருந்த போதே அந்தச் சந்தேகம் வந்தது. இப்போது அது ஊர்ஜிதமாகிவிட்டது. ஸ்டூடியோ புரோகிராம் மானேஜர் பிரகாஷ் ராவ், உள்ளே இருந்தபடியே வெளியே போயிருக்கிறதாகத் தகவல் கூறி அவர்கள் இருவரையும் ஏமாற்றிக் கொண்டிருக்கிறான். ஏமாற்றுகிறான் என்று சொல்வது தப்பாக இருக்கலாம். தட்டிக் கழித்துக் கொண்டிருக்கிறான். இப்போதும் இல்லை என்று சொல்லி அனுப்பிவிட்ட பிறகுதான் நிஜமாகவே வெளியே கிளம்பியிருக்கிறான்.

"நாம் போகலாமா?" என்று சுஜாதா கேட்டாள்.

சந்தர், "உம், வேறே என்ன செய்வது? நானும் உன் பேச்சைக் கேட்டுக் கொண்டு அலைகிறேனே?" என்றான்.

"சரி, கிளம்பலாம்"

சுஜாதா எழுந்து நின்றாள். அவள் சிறிது கூடத் தளர்ந்து போய்விடவில்லை. ஒரு கணம் சந்தருக்கும் அவ்வளைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவள் புடவை இரண்டு இடங்களில் நூல் நைந்து போய்க் கிழிந்திருந்தது அவனுக்குத் தெரியும். அன்று பிற்பகலில்தான் அந்தப் புடவைக்கு அவன் கோணலும் மாணலு மாக இஸ்திரி போட்டுக் கொடுத்திருந்தான். அதை அவள் வெகு சாமர்த்தியமாகக் கட்டிக் கொண்டு அதிகம் கசங்காமலே வைத்துக் கொண்டிருந்தாள். அவளால் அரை மணிக்கு மேல் ஒரே நிலையில் உட்கார்ந்துகொள்ள முடிந்தது. அவள் தொந்தரவின் பேரில்தான் என்றும்போல இன்றும் அவன் கிளம்பி வந்திருக்கிறான். பிரகாஷ்

ராவ் சுஜாதாவின் சித்தப்பா பிள்ளை. அவனுடைய நாணயத்தை இதோ சுஜாதாவே தெரிந்து கொண்டுவிட்டாள்.

"சரி, வா போகலாம்" என்று சந்தரும் எழுந்து நின்று கொண்டான். அந்த அறையில் இருந்த ஸ்டூடியோ வரவேற்பாளன் ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். அவனிடம், "நாங்கள் வந்து போனோம் என்று மிஸ்டர் பிரகாஷ் ராவுக்குச் சொல்லிவிடுங்கள்" என்று சுஜாதா சொன்னாள். அப்போது சந்தர், "அதோ பார்" என்றான். சுஜாதா திரும்பிப் பார்த்தாள். ஒரு கார் வந்து கொண்டிருந்தது.

கார் உள்ளே செல்லும்போது அதில் உட்கார்ந்திருந்த பிரகாஷ் ராவ் அவர்கள் பக்கமே பார்த்தபடி இருந்தான். சுஜாதாவும், சந்தரும் அவனைப் பார்த்து விட்டதை அவனும் பார்த்துவிட்டான். சுஜாதா வரவேற்பாளனிடம், "இப்போது சொல்லுங்கள்" என்றாள். அவன், "அவர் முதலில் ரூமுக்குப் போய்ச் சேரட்டும்" என்றான்.

ஆனால் அதற்குத் தேவையில்லாமல் போய்விட்டது. பிரகாஷ் ராவே டெலிபோனில் வரவேற்பாளனைக் கூப்பிட்டு, "அவர்களை என்னிடம் அனுப்பு" என்றான். சுஜாதாவும் சந்தரும் பிரகாஷ் ராவ் அறைக்குச் சென்றார்கள.

பிரகாஷ் ராவ் அறையில் எல்லா இடத்தையும் அடைத்துக் கொண்டு ஒரு பெரிய மேஜையும், இரு சிறு மேஜைகளும் இருந்தன. இருந்த சிறிய இடைவெளியில் பிரம்பு நாற்காலிகள் அப்படியும் இப்படியுமாகப் போடப்பட்டிருந்தன. எங்கே பார்த்தாலும் காகிதம், காகிதக்கட்டு, பைல் என்று பல குவியல்கள் கிடந்தன. தரையில் ஒரு மூலையில் மூன்று நான்கு தம்ளர்கள்— காபி குடித்தது அப்படியே கழுவப்படாமல் இருந்தன. பிரகாஷ் ராவைத் தவிர இன்னும் இரண்டு பேரும் அந்த அறையிலேயே உட்கார்ந்து கொண்டு வேலை பார்த்து வந்தார்கள். பிரகாஷ் ராவின் மேஜை மேலிருந்த இரு டெலிபோன்கள் மாறி மாறி அடித்த வண்ணம் இருந்தன. சில சமயத்தில் இரண்டும் ஒரே காலத்தில் ஒலித்தன. "வா, சுஜாதா" என்று வாயாரத்தான் பிரகாஷ் ராவ் சுஜாதாவையும் சந்தரையும் வரவேற்றான்.

சுஜாதா மிகவும் அன்பாகப் புன்னகை புரிந்தாள். "நான் சொன்னேனே, இவரைத்தான்" என்று சந்தரைக் காட்டினாள்.

"வாருங்கள், உட்காருங்கள்" என்று பிரம்பு நாற்காலிகளைக் காட்டினான் பிரகாஷ் ராவ்.

சுஜாதா உட்கார்ந்த நாற்காலி பிரகாஷ்ராவ் திசைநோக்கிப் போடப்பட்டிருந்தது. சந்தர் அமர்ந்திருந்த நாற்காலி வெளிக்

கதவைப் பார்த்த மாதிரி இருந்தது. நாற்காலியில் உட்கார்ந்த பின்னர், சந்தர் தன்னால் இயன்ற வரையில் முதுகை முறுக்கிக் கொண்டு பிரகாஷ் ராவைப் பார்த்த மாதிரியான நிலையில் தன்னை இருத்திக் கொண்டான். நாற்காலி குழிவானதாக இருந்த தால் அப்படி உட்காருவது சிறிது சிரமமாகத்தான் இருந்தது.

“நீ வீட்டுக்கு வந்திருந்தபோது சொன்னது இவரைத் தானே?” என்று பிரகாஷ்ராவ் ஆரம்பித்தான்.

“ஆமாம், ஆமாம். என் கூடத்தான் டில்லியில் டிராமா இன்ஸ்டிடியூட்டில் படித்தார். அந்த செட்டிலே இவருக்குத்தான் முதல் ராங்க். ரொம்ப நல்ல நடிகர்” என்றாள் சுஜாதா.

“ஆ......ஆ” என்றான் பிரகாஷ் ராவ்.

“மெட்ராஸிலேயும் நாங்கள் இரண்டு பேருமாகத்தான் நாடக வகுப்பு நடத்திக் கொண்டு வருகிறோம். எல்லாம் நன்றாகத்தான் இருக்கிறது. கவர்ன்மெண்ட் பணம் தருகிறது. ஆனால் நாடகம் பற்றி ஒன்றுமே தெரியாதவர்களை எல்லாம் சேர்மெனாகப் போட்டு விடுகிறார்கள். ரொம்பக் கஷ்டமாகப் போய்விடுகிறது. இப்போது இரண்டு வருஷமாக எஸ்.எஸ்.பி. எங்களை அழ அழ வைத்து விடுகிறாள்.”

“அப்படி என்ன பண்றாங்க அந்த அம்மா?” என்று பிரகாஷ் ராவ் கேட்டான்.

“சின்ன வேலையிலிருந்து பெரியது வரை எல்லாம் நாங்கள் தான் செய்கிறோம். எங்களைப் பற்றி அவள் ஒரு இடத்தில் ஒரு நல்ல வார்த்தை சொல்வது கிடையாது. வெளிநாடுகளிலிருந்து நிபுணர்கள் யாராவது வந்தால் எங்களைச் சரியாக அறிமுகம் செய்து வைப்பது கிடையாது. பயிற்சி தருவது நாங்கள். ஆனால் உள்ளூரிலேயே ஏதாவது உதவாக்கரை ஆளைக் கொண்டு வந்து ‘விசிடிங் புரொபஸர்’ என்று கொண்டு வந்து விடுகிறது. அவன் அடிக்கிற கொம்மாளத்திற்கு நாங்கள் பணிந்துபோக வேண்டும்...”

இதை எல்லாம் ஏன் சுஜாதா சொல்லிக் கொண்டிருக்கிறாள் என்று சந்தருக்குத் தோன்றியது. அவனுக்குக்கூட அவை பெரிய கொடுமைகளாகத் தோன்றவில்லை. ஆனால், “ரொம்ப கஷ்டம் தான்,” என்றான் பிரகாஷ்ராவ். “அந்த மாதிரி ஒருத்தர் கீழே வேலைபண்ண நேர்ந்துவிட்டால் சித்திரவதைதான்.”

“அதுதான் சரியான வார்த்தை. சித்திரவதை” என்றாள் சுஜாதா. “நான்தான் மிஸ்டர் சந்தர்கிட்டே சொன்னேன்— இந்த டிராமாவையே கட்டிக் கொண்டு அழுவதற்குப் பதிலாக வேறே எங்கேயாவது பார்க்கலாம் என்று. ரொம்ப நல்ல நடிகர். நல்ல

திறமை இருக்கிறது. சினிமாவிலே அப்பவே சேர்ந்திருந்தால் இன்றைக்குள்ளே நன்றாக முன்னுக்கு வந்திருக்கலாம்."

பிரகாஷ் ராவ் மிகவும் குறைந்த அளவு கவனம்தான் சந்தர் மீது செலுத்தினான். அது அலட்சியத்தினால் இருக்காது என்று மட்டும் தெரிந்தது.

"நாங்கள் போன திங்கட்கிழமையே வந்திருந்தோம். அப்புறம் வெள்ளிக்கிழமை வந்திருந்தோம். இரண்டு நாளிலேயும், நீ எங்கேயோ வெளியே போயிருந்தாயாம்."

"ஆமாம், ஆமாம்" என்று பிரகாஷ் ராவ் அவசரப்பட்டுச் சொன்னான்.

சிறிதுநேரம் எல்லாரும் மௌனமாக இருந்தார்கள். பிரகாஷ் ராவ் அறையில் வேலை செய்து கொண்டிருந்த இருவரும் தங்கள் வேலையையே கவனித்த வண்ணம் இருந்தார்கள். ஒரு பையன் உள்ளேவந்து, "சார், மூணாவது ஸ்டேஜிலே பார்க்கப்" என்றான்.

"நாளைக்கு வேலை இருக்கா, இல்லை செட்டைக் கலைக்கப் போகிறாங்களா? கேளு அவங்களை!" என்று பிரகாஷ் ராவ் சொன்னான்.

"சுப்பிரமணியமே வந்து சொல்வதாகச் சொன்னார், சார்" என்றான் பையன்.

அப்போது தடிமனான ஒருவன் வந்தான். சுஜாதா இருப்பதைக் கூடப் பாராட்டாமல், "எமிரா ரேய்" என்று ஏதோ சொன்னான்.

பிரகாஷ் ராவ் அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல், "ஆமாம் சுப்பிரமணியம், நாளைக்கு நீங்க கண்டின்யூ பண்ண றீங்களா? இன்னியோடு முடிந்ததா?" என்று கேட்டான்.

"நம்ப புரொட்யூசர், பார்ட்னர் இரண்டு பேரும் கேசுக்காக மசூலிப்பட்டணம் போகிறாங்க. இனிமேல் எல்லாம் அவுங்க திரும்பி வந்தப்புறம்தான்."

"அக்கவுண்டண்ட் உன்னைக் கூப்பிட்டனுப்பிச்சா நீ போகவே இல்லையாம்."

சுப்பிரமணியம் அதிக அக்கறை காட்டவில்லை. "அந்தச் செக்குக்காக" என்றான். "அது திரும்பி வந்து விட்டது. அதற்குத்தான்."

"இன்னொரு தடவை அப்படி வந்தால் இந்த ஸ்டூடியோவிலே உங்களை ஷூட்டிங்குக்கு விடமாட்டாங்க, நான் சொல்லி விட்டேன்."

"அட போப்பா! இந்த ஸ்டூடியோ இல்லை என்றால் இன்னும் ஒன்பது இருக்கிறது."

சந்தருக்கு முதுகு மிகவும் வலித்தது. அவன் நாற்காலியில் அமிழ்ந்து சரியாக உட்கார்ந்து கொண்டான். எழுந்து வெளியில் போகலாம். ஆனால் வாசற்படி அருகிலேயே அந்தத் தடி சுப்பிரமணியம் நின்று கொண்டிருந்தான். அவனைக் குற்றம் சொல்வதிலும் பயனில்லை. அந்த அறையில் சுப்பிரமணியம் இடைஞ்சல் இல்லாமல் வேறிடமாய்ப் போய் உட்காருவதற்கு இடமே இல்லாமல் இருந்தது.

பிரகாஷ் ராவ் சுஜாதாவைப் பார்த்தான். சுப்பிரமணியமும் அவளைப் பார்த்தான்.

"உங்க டைரக்டர் இருக்காரா, கிளம்பிவிட்டாரா?" என்று பிரகாஷ் ராவ் சுப்பிரமணியத்தைக் கேட்டான்.

"ஷூட்டிங் முடிந்த உடனேயே கிளம்பின ஆசாமி அவர்தான்" என்றான் சுப்பிரமணியம். பிறகு, "ஏன், என்ன விஷயம்?" என்று கேட்டான்.

"இல்லை. அவரைப் பார்க்கிறதுக்குத்தான் இவர்கள் இரண்டு பேரையும் நான் வரச் சொன்னேன்" என்றான் பிரகாஷ்ராவ். சந்தருக்குச் சிரிப்பு வரவில்லை.

"ஏதாவது ரோலுக்கா? இந்தப் படத்திலேயா? படமே முடியப் போகிறது— இனிமேல் ஏதாவது இருந்தாலும் ரொம்பச் சின்ன பிட் ரோல்தான் இருக்கும். யாருக்கு?"

"சாருக்குத்தான். இவ என் கஸின். எங்க பெரியப்பா பெண். இவங்க இரண்டுபேரும் சேர்ந்து வேலை பார்க்கிறாங்க."

"எங்கே?"

பிரகாஷ் ராவ் ஏதோ தப்புத் தப்பாகச் சொன்னான். சந்தர் திருத்த வாயெடுத்தவன் பேசவில்லை.

சுப்பிரமணியம் சந்தரைப் பார்த்து, "நீங்க சொல்லிக் கொடுக்கிற நாடகத்தைக் கற்றுக்கொள்ள நிறையப் பேர் வருகிறார்களா?" என்று கேட்டான்.

"ஒரு வருஷத்துக்கு இருபது பேருக்குக் குறையாது."

"வகுப்பு நடக்கிறது எப்போ?"

"ஈவினிங்ஸ்லே ஆறு மணியிலிருந்து எட்டரை வரை. வாரத்திலே நான்கு நாட்களுக்கு."

"உங்க சம்பளமெல்லாம் ரெகுலரா—"

"அப்படி என்றால்?"

"இல்லை, மாதா மாதம் கொடுத்து விடுவார்களா என்று"

"ஓ! அதெல்லாம் சரியாக முதல் தேதியே கொடுத்திடு வாங்க. இதற்கு கவர்ன்மெண்ட் கிராண்ட் இருக்கிறது."

சுப்பிரமணியம் சிறிது யோசித்த பிறகு சொன்னான், "சார், நான் உங்க பிரதர்னு நினைச்சுக்குங்க. உங்க மாதிரி மனுஷாளுங் கள்ளாம் இந்த எழவெடுத்த சினிமா ஃபீல்டுக்கு வரவேண்டாம். நீங்க இப்போ இருக்கிற வேலையிலேயே இருந்திண்டு இருங்க சார்."

சந்தர், சுஜாதா இருவரும் அசையாமல் அப்படியே உட் கார்ந்திருந்தார்கள். ஆனால் சுப்பிரமணியம் சங்கடப்பட்டுக் கொள்ளவில்லை.

இரண்டு டெலிபோன்களும் ஒருமித்து அடித்தன. இது பிரகாஷ் ராவுக்குச் சௌகரியமாக இருந்தது. ஒன்றை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டு "ஹலோ" என்றான். பிறகு அந்த அறையில் வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒருவரைப் பார்த்து, "இது உங்களுக்கு" என்றான். அவர் சிறிது இடித்துத் தள்ளிக் கொண்டுதான் போன் அருகே வர முடிந்தது. சுஜாதா ஒரு பக்கமாகச் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்தாள்.

பிரகாஷ் ராவ் இன்னொரு போனை எடுப்பதற்குள் அது மணி அடிப்பது நின்றுவிட்டது. "முட்டாள்கள்" என்று அவன் வாய்க்குள் முனகிக் கொண்டான்.

சுப்பிரமணியம் பிரகாஷ் ராவைப் பார்த்து, "ஏன், உங்க ஸ்டூடியோ படத்துக்கே முயற்சி பண்ணிப் பாரேன்" என்றான்.

பிரகாஷ் ராவ், "எங்கேப்பா? இப்போது எல்லாம் நாங்க எதை ரெகமண்ட் பண்ணுகிறோமோ அதைத்தான் எங்க டைரக்டர் ஒதுக்கித் தள்ளிவிடுகிறார்" என்றான்.

"நீங்க ஊரிலே இருக்கிற கண்ட எக்ஸ்ட்ரா வெல்லாம் அவர் முன்னாலே கொண்டு போய் நிறுத்துறீங்க. உங்களுக்கு மதிப்பே இல்லாமே போயிடுத்து... எக்ஸ்யூஸ் மி சார்" என்று சுப்பிரமணியம் சந்தரைப் பார்த்து முடித்தான்.

அப்போது யாரோ ஒருவன் வந்து சுப்பிரமணியத்தைக் கூப்பிடவே, அவன் போய்விட்டான். பிரகாஷ் ராவ் சுஜாதா வுக்கும், சந்தருக்கும் காபி வரவழைத்தான். காபி கொண்டு வந்த பையன் ஒரு கெட்டிலைக் கீழே வைத்து விட்டு, அங்கே அறையில் இருந்த காபி தம்ளரைக் கழுவிக் கொண்டு வர எடுத்துப் போனான். சந்தருக்குக் காபி குடிக்க வேண்டாம் போலிருந்தது.

"நீங்க ஸ்டில் இரண்டு என்னிடம் கொடுத்துவைங்க. நான் ஒரு பத்து நாளிலே தகவல் சொல்கிறேன்" என்று பிரகாஷ் ராவ் உறுதி கொடுத்தான்.

சுஜாதா கைப்பையைத் திறந்து அதிலிருந்து சந்தருடைய புகைப்படங்கள் இரண்டை எடுத்துப் பிரகாஷ் ராவிடம் கொடுத்தாள். பிரகாஷ் ராவ் அப்படங்களை வைப்பதற்காகத் தான் மேஜை டிராயர் ஒன்றைத் திறந்தான். திறந்த டிராயரைச் சந்தர் நன்றாகப் பார்க்க முடிந்தது. வேறு யார் யாருடைய புகைப் படங்களோ டிராயர் நிறைய இருந்தன. உள்ளே இருந்த படியே 'இல்லை' என்று பிரகாஷ் ராவ் அவர்களை இருமுறை திருப்பி அனுப்பியது ஏமாற்ற வேண்டும் என்ற ஒரே எண்ணத்தினால் இருக்காது என்று சந்தருக்குத் தோன்றிற்று.

ஸ்டூடியோவிலிருந்து வெளியே வந்ததும் சந்தர், "நாம் காபி சாப்பிடலாமா?" என்று சுஜாதாவைக் கேட்டான்.

"இப்போதானே சாப்பிட்டோம்!"

"எனக்கு மறுபடியும் சாப்பிட வேண்டும் போலிருக்கிறது."

ஓட்டலில் தனி அறைக்குச் சென்று ஒரே காபி வர வழைத்துச் சந்தர் மட்டும் சாப்பிட்டான். சுஜாதா பில் பணத்தைக்கொடுத்தாள். அவள் கைப் பையிலிருந்து ஒரு கவர் கீழே விழுந்தது. சந்தர், "இந்தக் கைரேகைக்காரன் என்ன சொல்லியிருக்கிறான்?" என்று கேட்டான்.

சுஜாதா அந்தக் கவரை அப்படியே சந்தரிடம் கொடுத்தாள். சுஜாதாவே அந்த ஜோசியனிடம் சந்தர் பற்றிக் கேட்டு எழுதி யிருக்கிறாள். இது முதல் தடவையல்ல; அவளுக்கு ஜோசியத்தில் நம்பிக்கை உண்டு. சித்தப்பா பிள்ளை மீதும் நம்பிக்கை உண்டு.

அன்று அவர்கள் எடுக்க வேண்டிய வகுப்பு ஒன்றும் இல்லை. சுஜாதா சந்தரை அவன் வீட்டுச் சந்து முனைவரை கொண்டு வந்துவிட்டுத் தன் ஹாஸ்டலுக்குப் பஸ் ஏறிப் போனாள். சந்தர் வீட்டில் சுஜாதாவையும், சுஜாதாவைப் பற்றியும் தெரியும். சந்தருடைய அம்மா, "அவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு அவளுடன் சுற்றிக் கொண்டு இரேன்" என்று சொல்லியிருக்கிறாள். சரியான வேலை வருமானம் இல்லாதபோது எல்லாவற்றிற்கும் தைரியம் வருகிறது, கல்யாணம் பண்ணிக் கொள்ள மட்டும் வருவதில்லை.

சந்தருக்கு அன்றைய தபாலில் நான்கு கடிதங்கள் வந்தி ருந்தன. ஒன்றுதான் கடிதம். மற்ற மூன்றிலும் வெவ்வேறு நாடக வைபவங்களுக்கு அழைப்புகள். இரண்டு வைபவங்களில் மந்திரிகள்

கலந்து கொள்ள இருந்தார்கள். மூன்றாவது சென்னையிலுள்ள ஒரு வெளிநாட்டு கான்சல்—ஜெனரல் வீட்டில் நடப்பது. அங்கே முதல்தர வெளிநாட்டுச் சாராயம் தருவார்கள். தென்னிந்திய நாடக மரபு பற்றிச் சந்தர் ஒரு வேளை சிறு பிரசங்கம் ஒன்று செய்ய வேண்டியிருக்கும். அவன் பிரசங்கத்தைக் கேட்பார்கள். இலவச விஸ்கி தருவார்கள். ஒரு நல்ல பெரிய வருமானமுள்ள சான்ஸ்தான் அவனுக்கு வாங்கித்தரமாட்டார்கள். அவனும் அந்த அரைவேக்காடு கலாரசிகை எஸ்.எஸ்.பி.யின் அடுப்பங்கரை சூழ்ச்சிகளுக்கும் மூளைக் கொதிப்புகளுக்கும் ஈடு கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். சந்தரால்தான் எஸ்.எஸ்.பிக்கு சுஜாதாவையும் பிடிக்காமல் போய்விட்டது. இந்த எஸ்.எஸ்.பி.யை அவன் தூக்கியெறிந்து பேசிவிட அதிக நேரம் ஆகாது. அத்துடன் அவன், பாவம் சுஜாதா, இருவரும் இன்ஸ்டிடியூட்டை விட்டு வெளியேற வேண்டும். எஸ்.எஸ்.பி.யை விரோதித்துக் கொண்டால் தலை போய்விடாது. ஆனால் அரசாங்கமாக ஆதரவளித்து வரும் எந்த நாடகப் பள்ளியிலும் ஒரு ஐந்து ரூபாய் வேலைகூட கிடைக்காது. அன்று சந்தருக்கும், சுஜாதாவுக்கும் அம்மாதிரி வேலை தவிர வேறு எதுவும் கிடையாது. கிடைக்காது.

●●●

நாடக வகுப்புகள் நடத்தும் வேலையில் ஒரு சௌகரியம் இருந்தது. பகலில் நன்றாகத் தூங்க முடிந்தது. சந்தர் தூங்கி எழுந்து விட்டு சுஜாதாவின் ஹாஸ்டலுக்குப் போனான். அவள் அங்கு இல்லை. அங்கிருந்து அவன் நேராக நாடக வகுப்பு நடத்தும் இடத்திற்குச் சென்றான். ஒரு சின்ன காளி கோயிலை அடுத்திருந்த கட்டடத்தில்தான் அந்த வகுப்புகள் நடத்த ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. பகல் வேளையில் இருந்த கட்டடத்தில் குழந்தைகள் பள்ளி நடந்தது. அந்தப் பள்ளிக்கு ஒரு நிர்வாகக்குழு உண்டு. அந்தக் குழுவிற்கும் சேர்மென் எஸ்.எஸ்.பி.

சுஜாதா வகுப்பு நடத்த வரவில்லை. அவள் வகுப்பையும் சந்தரே சேர்த்து நடத்திக் கொண்டிருந்தான். நாடகத்தில் கைக்—குட்டையை நழுவ விடுவதுபோல ஒரு காட்சி வந்தால் எப்படிக் கைக்குட்டையை எப்படி ததும்ப நழுவவிடுவது என்று சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். கைக்குட்டை மிகவும் அழுக்கடைந்து விட்டிருந்தது.

எட்டேகால் மணிக்கு சுஜாதா பரபரப்புடன் வந்தாள். “சந்தர், இப்போதே புறப்படு. பிரகாஷ்ராவ் வரச் சொல்லியிருக் கிறான்” என்று சொன்னாள்.

"நீ அவனைப் பார்க்கத்தான் போயிருந்தாயா?"

"ஐந்து மணிக்குச் சொல்லியனுப்பியிருந்தான். நானும் உடனே தான் ஸ்டூடியோவுக்குப் போயிருந்தேன். அதற்குள் எங்கேயோ வெளியே போய்விட்டு ஏழரை மணிக்குத்தான் திரும்பி வந்தான்."

"வெளியிலேதான் போயிருந்தானா?"

"இந்தத் தடவை நிஜமாகவே அவன் இல்லை. ஒரு டைரக்டர் இன்று உன்னை அழைத்துவரச் சொன்னாராம். உடனே ஸ்டூடியோவுக்குக் கிளம்பு."

"இப்போது எட்டரையாகிறதே?"

"நாளைக்கு என்று போனால் அதற்குள் வேறு யாரையாவது செலக்ட் பண்ணிவிடுவார்கள்."

"அப்படி ஒரு ராத்திரியிலே போய்விடுவது இதற்குள்ளாகவே போயிருக்கக்கூடாதா?"

சுஜாதா ஒன்றும் சொல்லாமல் நின்றாள். பிறகு, "நான் வேண்டுமானால் பிரகாஷ்ராவுக்கு மறுபடியும் டெலிபோன் பண்ணிக் கேட்கிறேன்" என்றாள்.

சந்தர் உதட்டைப் பிதுக்கினான். அன்று எஸ்.எஸ்.பி. வர மாட்டாளாதலால் அன்றைய வகுப்பை அத்துடனேயே முடித்துக் கொள்ள முடிந்தது. அந்தப் பள்ளிக்கூடத்துக்கு டெலிபோன் கிடையாது. கோயிலைத் தாண்டி நாலு வீடுகள் தள்ளித்தான் இருந்தது. அந்த வீடு எஸ்.எஸ்.பி.யுடையது.

கோயிலைத் தாண்டும் போது சந்தர், 'ஹே காளி, எஸ்.எஸ்.பி. வீட்டில் இருக்கக் கூடாது' என்று வேண்டிக் கொண்டான். சுஜாதா, "தாயே, பிரகாஷ்ராவ் ஸ்டூடியோவில் அவன் அயிலேயே இருக்கவேண்டுமே" என்று பிரார்த்தித்துக் கொண்டாள்.

எஸ்.எஸ்.பி. வீட்டில் இல்லை. ஸ்டூடியோவில் தன் அறை யிலேயே பிரகாஷ்ராவ் இருந்தான். அவர்கள் பக்கத்திலேயே நின்ற எஸ்.எஸ்.பி. வீட்டு வேலைக்காரனை சுஜாதா, "கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் கொண்டு வா" என்று சொல்லியனுப்பினாள். அவர் களைப் பக்கத்து பஸ் ஸ்டாண்டருகில் காத்துக் கொண்டிருக்கச் சொன்னான் பிரகாஷ்ராவ். பத்துப் பதினைந்து நிமிஷத்தில் அவன் அங்கு வந்து அழைத்துப் போவதாகச் சொன்னான். டெலிபோன் வைத்துவிட்டு சுஜாதாவும் சந்தரும் வெளியே வந்தார்கள்.

சந்தர், "இன்றைக்கு ஷேவ்கூடச் சரியாகச் செய்து கொள்ள வில்லை" என்று முணுமுணுத்துக் கொண்டான். பஸ் ஸ்டாண்ட்

அருகே இருட்டாகத்தான் இருந்தது. சுஜாதா தன் கைப்பையைத் திறந்து சந்தரிடம் ஒரு சிறிய வட்டப் பெட்டியை எடுத்துக் கொடுத்தாள். சந்தர் பவுடர் எடுத்துத் தன் முகத்தில் ஒத்திக் கொண்டான்.

ஒரு கார் வந்து நின்றது. அதில் பிரகாஷ்ராவ் இருந்தான். "உம், ஏறுங்கள்" என்றான்.

சுஜாதா, "நானும் வரவேண்டுமா? நீங்கள் இரண்டு பேரும் போய்விட்டு வாருங்களேன்" என்றாள்.

"நான் உன்னை முதலில் ஹாஸ்டலில் டிராப் பண்ணி விடுகிறேன்."

சுஜாதாவும் ஏறிக்கொண்டாள். வண்டி போய்க் கொண்டிருக்கும்போது பிரகாஷ்ராவ் சொன்னான்: "நாம் எதற்கும் டைரக்டரை முதலில் பார்த்துவிடுவோம்."

"சரி, யாரது?"

பிரகாஷ்ராவ் ஒரு பெயர் சொன்னான். சித்தார்த்தா என்ற அந்த டைரக்டர் நல்ல டைரக்டர் என்று பெயர் வாங்கியவன். இன்னொரு விதத்திலும் அவன் பெயர் பெற்றவன். அவன் படம் முடியும் வரையிலும் அப்படத்தில் கதாநாயகியாக நடிப்பவள் ஏதோ சொக்குப் பொடி போடப்பட்டவள் போல வீடு, வாசல், கணவன், தாய் எல்லாவற்றையும் உதறித் தள்ளிவிட்டு சித்தார்த் தாவே சகலமும் என்றிருப்பாள். சித்தார்த்தாவின் படங்களில் நடிப்பு மிகவும் சிறப்பாக அமைவதற்கு இதையும் ஒரு காரணமா—கச் சொல்வார்கள். வண்டி ஒரு பெரிய கட்டிடத்தின் முன் நின்றது. சித்தார்த்தா மூன்றாவது மாடியில் இரண்டாவது பிளாக்கில் இருந்தான்.

சந்தருக்கு மாடிப்படி ஏறுவதில் சிரமமிருந்தது. பிரகாஷ்ராவும், சுஜாதாவும் சிரமப்படவில்லை. பிரகாஷ் ராவுக்கு சுஜாதாவைக் கீழே காரில் தனியாக விட்டுவிட்டு வர மனமில்லை.

பிரகாஷ் ராவ் வாசல் மணியை அழுத்தியபோது அது பியானோ வாசிக்கும் ஒலியை எழுப்பியது.

சித்தார்த்தாவே வந்து கதவைத் திறந்தான். "ஓ! வந்து விட்டாயா? வா வா" என்று சொன்னான்.

"இது என் பெரியப்பா பெண் சுஜாதா. இது மிஸ்டர் சந்தர் அந்த நாடக நடிகர்."

"உள்ளே வாங்க, முதல்லே உள்ளே வாங்க!"

எல்லாரும் உட்கார்ந்தவுடன் சித்தார்த்தா பிரகாஷ்ராவைப் பார்த்து, "சரிப்பா, சொல்லு" என்றான்.

பிரகாஷ் ராவ் சந்தரைக் காண்பித்து, "இவரைத்தான் சொன்னேன்" என்றான்.

சித்தார்த்தா சந்தரைப் பார்த்தான். "உம், என்ன பண்ணிக் கொண்டிருக்கிறார்?" என்று கேட்டான்.

"டில்லி டிராமா இன்ஸ்டிடியூட்டிலே டிப்ளமாவெல்லாம் வாங்கி இருக்கிறார். சினிமாவிலே நடிக்கவில்லையென்றாலும் நிறைய நாடகங்களில் நடித்திருக்கிறார். இங்கே மெட்ராஸிலேயே டிராமா கிளாஸ் நடத்துகிறார்."

"எது? அந்த எஸ்.எஸ்.பி.யுடையதா?"

சந்தர் 'இல்லை. எஸ்.எஸ்.பி. அரசாங்கத்தால் நியமனம் பெற்ற வெறும் சேர்மென்தான். டிராமா வகுப்பு அவளுடையதில்லை' என்று சொல்லத்தான் நினைத்தான். ஆனால் இந்த நுட்பங்கள் எல்லாம் யாரும் காது கொடுத்துக் கேட்டுக் கொள்வதில்லை. புரிந்துகொள்வதும் இல்லை. "ஆமாம்", என்று ஒரே வார்த்தையில் சந்தர் பதில் சொன்னான்.

"ஐ ஸீ... இது?"

பிரகாஷ்ராவ் சொன்னான். "என் பெரியப்பா பெண், மிஸ்டர் சந்தர் கூட வேலை பார்க்கிறாள்."

"என்ன வேலை?"

"நானும் அதே டிராமா கிளாஸ்தான். நானும் வகுப்புகள் நடத்துகிறேன்."

"நீயும் டிராமா டிப்ளமா வாங்கியிருக்கிறாயா?"

"ஆமாம்."

சித்தார்த்தா ஒரு நிமிஷம் சுஜாதாவை உற்று நோக்கினான். பிறகு, "நீ மிஸ் சுஜாதா ஆனந்தராவ் இல்லை?" என்று கேட்டான்.

சுஜாதா கண்களை அகல விரித்துக் கொண்டு, "ஆமாம்" என்றாள்.

"உங்க டில்லி இன்ஸ்டிடியூட்டிலே 'மிருச்சகடிகா' நாடகத்தில் நீயும் நடித்தாய் இல்லையா?"

"ஆமாம்."

"நீதான் வசந்தசேனா இல்லை?"

"ஆமாம்."

"மை காட்! உனக்காக அப்புறம் நான் எங்கெங்கே எல்லாம் தேடினேன் தெரியுமா?"

"எனக்காகவா?"

"ஆமாம். நான் அந்த வருஷம் பிலிம் அவார்ட்ஸுக்காக டில்லி வந்திருந்தேன். உங்க இன்ஸ்டிடியூட் டிராமா பார்த்த அடுத்த நாளே நான் ஹைதராபாத் திரும்ப வேண்டியிருந்தது. மறுபடியும் நான் டில்லியிலே விசாரிக்கிறதுக்குள் உங்க செட்டே மாறிப் போய்விட்டது."

"அதுதான் கடைசி மாசம். கோர்ஸே ஒரு வருஷம்தான்."

"நான் மிருச்சகடிகா நாடகத்திலே நடித்தவள் என்று கேட்டால், இந்த மிருச்சகடிகாவையே ஏழெட்டு தரம் போட்டி ருக்காங்க. ஏழெட்டு வெவ்வேறு வசந்தசேனாவை வைத்து, நான் எந்த எந்தப் பெண்ணையோ எல்லாம் பார்த்த பிறகுதான் உன் பெயர் கிடைத்தது. இப்போது சொல், உனக்கு சினிமாவிலே நடிக்க ஆட்சேபணை உண்டா?"

சுஜாதா வெட்கப்பட்டவள் போல் இருந்தாள். பிரகாஷ்ராவ் சொன்னான்: "நாங்க வந்தது மிஸ்டர் சந்தருக்காகத்தான். உண்மையிலே இவள் இங்கு வருவதாகக்கூட இல்லை."

"வந்தது ரொம்ப நல்லதாகப் போச்சு. நான் இந்த இரண்டு வருஷமா எங்கெங்கேயெல்லாமோ தேடிக்கொண்டு இருக் கிறேன், விசாரித்துக்கொண்டு இருக்கிறேன், மிஸ் ஆனந்தராவ். நான் எடுக்கப் போகிற படம் பெரிய பாக்ஸ் ஆபீஸ் மாஸ் அப்பீல் படம் இல்லை. சரத்பாபுவுடைய 'சந்திரநாத்'தான் நான் இப்போ எடுக்கப் போகிற படம். அதிலே சரயு ரோலுக்கு நீ சரியா இருப்பேன்னு அப்பவே பார்த்து வைத்தேன்."

"மிருச்சகடிகாவிலே சந்தரும் நடித்தார். அதிலே சாரு தத்தன்—"

"நான் பார்த்தேன், நான் பார்த்தேன். ஆனால் நான் இப்போது பேசுகிறது சந்திரநாத் பற்றி."

"இவள் அப்பா அம்மா கொஞ்சம்கூடச் சம்மதப்பட மாட்டாங்க" என்றான் பிரகாஷ் ராவ்.

"அவங்க இங்கே இருக்காங்களா?"

"இல்லை. ஊரிலே இருக்காங்க."

"அப்போ மிஸ் ஆனந்த ராவ் இருக்கிறது எங்கே? உன் வீட்டிலேயா?"

"இல்லை, இல்லை. லேடீஸ் ஹாஸ்டலிலே இருக்கிறாள்."

"ஒரு ஹாஸ்டலிலே இருந்து கொண்டு டிராமா கற்றுக் கொள்கிறேன் என்று வருகிற சோதாப் பையன்கள் நடுவிலே பழகப் பெண்ணை விடுகிறவர்கள் சினிமாவுக்கு ஒன்றும் சொல்லமாட்டார்கள். என்னைத் தப்பாக எடுத்துக் கொள்ளாதே, மிஸ் ஆனந்த ராவ். நல்ல வாய்ப்பு வாழ்க்கையிலே ஒரே தடவை தான் வரும். உனக்கு நான் இந்த காரண்ட்டி தருகிறேன். இந்தப் படம் மூன்று மாதம், இல்லாது போனால் நான்கு மாதங்களிலே முடிந்துவிடும். தெரியுமா பிரகாஷ் ராவ்? இதற்குப் பைனான்ஸ் எல்லாம் ஜெயஸ்ரீ டாக்கீஸ் நந்தலால் பாலிகா. இன்றையத் தேதிக்கு இந்தியாவிலேயே ரொம்பப் பெரிய பார்ட்டி. படம் முடிந்தது என்றால் உடனே ரீலீஸ்தான். நாலே மாதம். அதனாலே, மிஸ் ஆனந்த ராவ், இந்த நாலு மாதத்திற்கப்புறம் நீ சினிமாவோ, டிராமாவோ, அடுப்பங்கரையோ எங்கே வேண்டுமானாலும் போகலாம்."

பிரகாஷ் ராவ் சங்கடப்பட்டுக் கொண்டு இருந்தான். சந்தர் படபடப்பு அதிகரித்தவனாக இருந்தான். சுஜாதாவுக்கு சித்தார்த்தாவின் பேச்சு அதிகம் பிடித்ததாகத் தெரியவில்லை. சித்தார்த்தாவும் அதை ஒரு மாதிரி புரிந்து கொண்டிருந்தான். சித்தார்த்தா சொன்னான்.

"உன்னை இப்போதே, இல்லை— ஆமாம் என்று சொல்லச் சொல்லவில்லை. இரண்டு நாள் எடுத்துக்கொள். விஷயம் இதுதான். உனக்கு நடிக்க வேண்டும் என்றுதான் இருக்கிறது— இல்லையானால் நீ ஏன் டில்லிக்குப் போய் டிப்ளமா எல்லாம் வாங்க வேண்டும்? உனக்கு இப்போது சினிமாவிலே நேரே ஹீரோயின் சான்ஸ் நான் தருகிறேன். நடிப்பிலே உன்னாலே எந்த அளவு எட்டமுடியும் என்று எனக்கு ஒரு மாதிரி விளங்கி இருக்கிறது. இதை மட்டும் வைத்துக்கொண்டு வேறு யாரும் முன்பின் தெரியாத ஒரு புதுப் பெண்ணுக்கு ஹீரோயின் ரோல் தரமாட்டார்கள். ஆனால் எனக்கு ஒரு நம்பிக்கை. நீ ஒரு இரண்டு நாளிலே பதில் கொடுத்தால் போதும்."

அந்த வேளைக்குப் பேச்சு வார்த்தையெல்லாம் முடிந்து விட்டது என்று தோன்ற வைப்பதுபோல எல்லோரும் மௌன மாக இருந்தார்கள். பிரகாஷ் ராவ்தான் முதலில், "நான் நாளைக்கு வந்துபார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டு எழுந்தான். சுஜாதாவும், சந்தரும் எழுந்தார்கள். ஆனால் சுஜாதா பிரகாஷ் ராவைப் பார்த்த பார்வையில் பிரகாஷ் ராவ் மீண்டும் பேசினான்: "நாங்கள் வந்ததே மிஸ்டர் சந்தருக்காகத்தான்" என்றான்.

சித்தார்த்தா சொன்னான்: "பார்க்கலாம். இந்த சப்ஜெக்டுக்கு ஒரே ஒரு ஹீரோதான். சலம்தான் சந்திரநாத் ரோல் பண்ணப் போகிறான். மற்ற ரோல்கள் இவருக்கு ஒன்றும் சரிப்பட்டு வராது. இந்தப் படம் இல்லாதுபோனால் பரவாயில்லை. அடுத்த படத்திலே நிச்சயம் உபயோகப்படுத்திக் கொள்கிறேன்."

மூவரும் படி இறங்கிக் கார் அருகே வந்தார்கள். சுஜாதா, "நாம் கொஞ்சம் பீச் வரையில் போய்விட்டு வீடு திரும்பலாமா?" என்று கேட்டாள்.

பிரகாஷ் ராவ் முதலில் பதில் சொல்லவில்லை. பிறகு, "சரி" என்றான்.

பத்து மணிக்கு பீச்சில் பீச்சும், விளக்குகளும் மட்டும்தான் இருந்தன. சிறிது குளிர்காற்று இருந்தது. கடல் நடுவில் சிறு சிறு சலசலப்புக்கு மேல் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் கரை ஓரமாகத்தான் ஏகமாக இரைச்சல் போட்டுக்கொண்டு அலைகள் புரண்டு அடித்துக்கொண்டு விழுந்து மாய்த்துக் கொண்டிருந்தன.

"நீங்கள் அடிக்கடி இவரைப் போய்ப் பார்த்துக் கொண்டிருங்கள்" என்று பிரகாஷ் ராவ் சந்தரிடம் சொன்னான். சந்தர் புன்னகைகூடப் புரியவில்லை. அவன் அடிக்கடி போய்ப் பார்க்க வேண்டியவர்கள் பட்டியல் பெரிதாக இருந்தது.

சுஜாதா, "உனக்கு என்ன தோன்றுகிறது?" என்று சந்தரைக் கேட்டாள்.

"அடுத்த படம் அவர் எடுக்கிறபோது பார்த்துக்கொள்ளலாம்."

"அது இல்லை. அவர் என்னைக் கூப்பிடுகிறாரே?"

"உன்னைத்தானே? ஏன், உனக்கு இஷ்டருந்தால் போயேன்."

பிரகாஷ் ராவ், "என்ன சொல்கிறார் அவர்?" என்று கேட்டான்.

"ஒன்றுமில்லை" என்றாள் சுஜாதா. பிறகு "திரும்பலாமா?" என்று கேட்டாள்.

கார் ரவுண்ட்டாணா பக்கம் வந்தவுடன், "எந்தப் பக்கம் திரும்ப?" என்று பிரகாஷ் ராவ் கேட்டான்.

"பூக்கடைப் போலீஸ் ஸ்டேஷன் பக்கம்" என்றாள். சுஜாதா.

கார் பூக்கடையை நெருங்கிப் போகும்போதே, "இங்கே எங்களை விட்டுவிடு. நாளைக்கு நான் டெலிபோன் செய்கிறேன்" என்று சுஜாதா சொன்னாள்.

"நான் உன்னை ஹாஸ்டலிலேயே விட்டு விடுகிறேனே!" என்றான் பிரகாஷ் ராவ்.

"இல்லை, நான் போய்க்கொள்வேன். அப்படி முடியாவிட்டால் சுந்தர் வீட்டுக்குப் போய்விடுவேன். அங்கே அவன் அம்மா, அக்கா, தங்கை எல்லாரும் இருக்கிறார்கள்."

பிரகாஷ் ராவ் வாதாடாமல் போய்விட்டான். சந்தர் சிறிது விறுவிறு என்று நடந்து கொண்டிருந்தான். அரை ஓட்டமாகச் சென்று சுஜாதா, "வா, நாம் புகாரியிலே ஏதாவது சாப்பிட்டு விட்டுப் போவோம்" என்றாள்.

"புகாரி கிகாரிக்கெல்லாம் என்னிடம் காசு இல்லை" என்று சந்தர் சொன்னான்.

"என்னிடம் இருக்கிறது. தயவு செய்து வா."

இப்போது சுஜாதாதான் முன்னால் போய்க் கொண்டிருந்தாள். அந்த ஓட்டல் வாசற்படியை அவள் கடக்கும்போது அங்கே இருந்த பிரகாசமான விளக்குகள், அவள் புடவை லேசாகக் கிழிய ஆரம்பித்திருப்பதைக் காட்டின. அநேகமாக அவள் புடவைகள் எல்லாமே அந்த நிலையில்தான் இருந்தன. அவள் புதிதாகத் துணிமணி எடுத்து வெகு நாட்கள் ஆகியிருக்க வேண்டும். மாதா மாதம் வருகிற இருநூறு ரூபாயில் ஹாஸ்டலுக்கு நூற்று பத்து ரூபாய் கொடுத்துவிட்டு, ஊருக்கு நாற்பது ரூபாய் அனுப்பி விட்டு, இரண்டு பெரிய அளவு 'சர்ஃப்' பெட்டிகள் வாங்கிய பிறகும் சந்தருடன் ஓட்டலுக்கு எப்போது போனாலும் அவளே பணம் கொடுத்துவிடுகிறாள்! எப்போதோ ஒரு சமயத்தில் மட்டும் புடவைக்கு அவனை இஸ்திரி போட்டுத் தருமாறு கேட்டுக் கொள்வாள். அவனே அப்படிச் செய்து தருவதாக ஒப்புக் கொண்டிருந்தான். அந்த வார்த்தையை மட்டும் அவன் மாதத்தில் ஒரு முறை இருமுறை காப்பாற்றினால் போதும்.

சந்தருக்கு ஐந்து நிமிஷம் சரியாக இருந்தது. பிறகு மறுபடியும் தலையை வலித்தது.

சர்வரிடம் "பிஸ்கட், சமோஸா, டீ" என்று சுஜாதா சொன்னாள். "உனக்கு என்ன என் மேலே கோபம்?" என்று சந்தரைக் கேட்டாள்.

"ஒன்றுமில்லையே!"

"பின் ஏன் மூஞ்சியைத் தூக்கிக்கொண்டு இருக்கிறாய்?"

"அதற்கு என்ன செய்வது? சிலர் மூஞ்சி எப்போதும் அப்படித் தான் இருக்கும்."

"நான் ரொம்ப நம்பிக்கையோடுதான் இருந்தேன்."

"இப்போது மட்டும் என்ன, சித்தார்த்தாவுக்கு உன்னை ரொம்பப் பிடித்திருக்கிறது."

"எனக்குப் பிடிக்கவில்லையே!"

"அப்படிச் சொல்லிவிடாதே. மூன்றே மாதத்தில் நீயும் பெரிய ஸ்டார் ஆகிவிடலாம்."

"எனக்குப் பெரிய ஸ்டார் ஆகவேண்டும் என்று எல்லாம் ஆசை கிடையாது."

இதற்குள் சர்வர் ஒரு பெரிய தட்டில் பீங்கான் கோப்பை தட்டுகள் கடகடவென்று ஒலிக்க, டீயும், பிஸ்கட்டும் கொண்டு வந்தான். சந்தர் ஒன்றும் எடுத்துக்கொள்ளவில்லை. சுஜாதாவினால் ஒன்றும் எடுத்துக் கொள்ள முடியவில்லை. டீயை மட்டும் அரை குறையாகச் சாப்பிட்டார்கள். தட்டில் பில் பணத்துடன் பத்து பைசா சேர்த்து வைத்துவிட்டு சுஜாதா சந்தர் பின்னால் போனாள். சந்தர், கந்தசாமி கோயில் தாண்டிப் பக்கத்திலுள்ள சந்திலே திரும்பிச் சென்று கொண்டிருந்தான். சந்தில் முனையில் இருந்த பசும்பால் கடையைத் தவிர மற்றப் பகுதிகள் அமைதியாக இருந்தன. பசுமாடுகளும், கன்றுகளும் நடுச் சந்தில் யாதொரு தயக்கமும் இல்லாமல் படுத்தபடி அசை போட்டுக் கொண்டிருந்தன. சுஜாதா, "சந்தர்" என்று கூப்பிட்டாள்.

அவன் திரும்பிப் பார்க்கவில்லை. சுஜாதா வேகமாக அவனை நெருங்கி, "சந்தர்!" என்றாள்.

அவன் நின்று, "என்ன நடுத்தெருவில் இருந்து கொண்டு கூப்பாடு போடுகிறாய்? நீ படித்தவளா?" என்று கேட்டான்.

"உனக்கு என்ன ஆயிற்று? நான் சினிமாவிலே சேருகிறதாகவே இல்லை—"

"உன்னை விரும்பித் தேடி அலைந்து ஒருவன் வருஷக் கணக்காக ஏங்கிக் கொண்டிருக்கிறான், அவனையும் கைவிட்டு விடுவாயா? நீ வசந்தசேனா இல்லையா?"

"என்ன, பச்சைக் குழந்தை மாதிரி பேசுகிறாய்? இன்றைக்குப் போனதே உனக்காகத்தான்—"

"நான் வெறுமனே ஒரு காரணம். உன்னை உன் சித்தப்பா பிள்ளை அழைத்துக் கொண்டு போனான். சித்தப்பா பிள்ளை தானே அவன்? ஒரு பெண்ணை மட்டும் தனியே அழைத்துக் கொண்டுபோக அவனுக்குக்கூட கொஞ்சம் கூச்சமாக இருக்காதா?"

"சீ, உன் புத்தி வெறும் சாக்கடையாகிவிட்டது."

சந்தர் பேசாமல் வேகமாக நடந்தான். சுஜாதா மறுபடியும் ஓடி வந்தாள். "சந்தர்..."

அவன் பதில் பேசுவதற்குள் விளக்கில்லாமல், மணி கூட அடிக்காமல் மூன்று சைக்கிள்காரர்கள் வேகமாக வந்தார்கள். சுஜாதா அப்படியே நின்றாள். சந்தர் சந்தின் ஓரத்திற்குத் தாவிக் கொண்டு சென்றான். சைக்கிள்காரர்கள் போய்விட்டார்கள். சந்தர் ஓரமாகவே நடந்து ஐந்தாறு வீடுகள் தாண்டி ஒரு கதவைத் தட்டினான். அதுதான் அவன் வீடு. அவன் தங்கை கதவைத் திறந்தாள். சந்தர் படி தாண்டியவுடன், "கதவைத் தாழ்ப்பாள் போடு" என்று தங்கையிடம் சொன்னான். ஆனால் அவள் சுஜாதாவைப் பார்த்துவிட்டாள்.

"சுஜாதா அக்கா வந்திருக்காளா?"

"அக்காவும் இல்லை, தக்காவும் இல்லை. கதவை இழுத்துச் சாத்து."

"இங்கே வந்திருக்காளே? வா அக்கா."

சந்தர் தன் தங்கையைப் பிடித்துத் தள்ளிவிட்டுக் கதவைச் சாத்தினான். தாழ்ப்பாள் போட்ட பிறகு சில விநாடிகள் கதவருகேயே நின்றான். கதவு தட்டப்படவில்லை.

"ஏன் அண்ணா சுஜாதாவை வெளியிலேயே வைத்துவிட்டுக் கதவைச் சாத்தினே? அம்மாவைக் கூப்பிடுகிறேன்."

"சத்தம் போடாமே உன் வேலையைப் பார்த்துக்கொண்டு போ. இல்லாத போனால் பல்லைத் தட்டிக் கொடுப்பேன்."

அவள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டு இருட்டில் உள்ளே சென்றாள். சந்தர் சப்தமே எழுப்பாமல் தாழ்ப்பாளைத் தளர்த்தினான். கதவை மிகவும் மெதுவாகத்தான் திறந்தான். அப்படியும் அது முனகிற்று. சந்து காலியாக இருந்தது.

சந்தர் வெளியே வந்து நின்றான். இருட்டாக இருந்தாலும் கண்கள் நன்றாகப் பார்த்தன. மாடுகள், கன்றுகள், சந்தில் வெளிச் சுவர் ஓரமாகப் படுத்துக் கொண்டிருப்பவர்கள், ஒரு குப்பைத் தொட்டி, முனையில் பசும்பால் கடை, கடையருகில் இருந்த விளக்குக் கம்பத்தில் பீடி சுருட்டு பற்ற வைத்துக் கொள்பவர்களுக்காகக் கட்டித் தொங்க விட்டிருக்கும் நார்த்திரி, ஒரு நாய் இவையெல்லாம் தெளிவாகவே தெரிந்தன. சுஜாதா சந்தைத் கடந்து திரும்பி பெரிய சாலையில் போய்க் கொண்டிருப்பாள். டாக்ஸிக்காக இருக்காது. நேரே சென்று அண்ணாமலை மன்றத்தைத்

தாண்டி கோட்டை ஸ்டேஷனுக்குப் போவாள். பதினொன்றே காலுக்குக்கூட ஒரு ரயில் உண்டு. ஹாஸ்டல் வாட்சுமென் கதவைத் திறந்துவிடுவான். அறைக்குப் போனவுடன் புடவை மாற்றிக் கொண்டு படுத்துக்கொண்டுவிடுவாள். படுத்துக்கொண்ட பிறகுதான் அவளால் சரியாக அழ முடியும்.

சந்தருக்கு மார்பு படபடப்பு, மூச்சு இரைப்பு எல்லாம் அடங்கியிருந்தது. மறுபடியும் சுஜாதாவை நடுத்தெருவில் அழச் செய்துவிட்டான். அவன் அவளை அழவைப்பதில் நூறில் ஒரு பங்கு எஸ்.எஸ்.பி. செய்வது கிடையாது. ஒரு வேளை அவனில்லாமல் சுஜாதா மட்டும் தனியாக இருந்தால் எஸ்.எஸ்.பி. சுஜாதாவிடம் உண்மையாகவே அன்பாகவும், ஆதரவாகவும் இருக்கக்கூடும். அவன் இல்லாவிட்டால் அவளுக்கு வந்திருக்கும் சினிமா வாய்ப்பை ஏற்றுக்கொள்வது ஏதோ பெருங் குற்றம் போல அவளுக்குத் தோன்றாது. அவன் பின்னாலேயே சுற்றிக் கொண்டிருந்துவிட்டுக் கடைசியில் ஒரு ராத்திரியில் நடுத் தெருவில் முகத்திற்கு நேரே சாத்தப்படும் கதவின் முன் அவள் நிற்க நேர்ந்திராது. இப்போது இல்லை, அவள் போய்விட்டாள்.

சந்துருக்கு மூச்சு விடுவதில் சிரமம் இல்லாமல் இருந்தது. யாராவது வீடு பெருக்கும்போது அவனுக்கு மூச்சுத் திணறும். அடுக்கு அடுக்காக மாடிப்படி ஏறும் போது மூச்சுத் திணறும். துணிக்கு இஸ்திரி போடும் போது மூச்சுத் திணறும். அப்படி இருந்தும் அவனாகவே ஒரு காலத்தில் சுஜாதாவின் புடவைகளுக்கு இஸ்திரி போட்டுத் தரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தான். ஆனால் இப்போது ஐந்தாறு மாதமாகவே என்றோ ஒரு நாள்தான் அதற்குச் சௌகரியப்பட்டுக் கொண்டிருக்கிறது. அது தெரிந்துதான் சுஜாதாவே அவனிடம் அதிகம் தருவது கிடையாது. இனி தரவேமாட்டாள். அவள் திரும்ப வரமாட்டாள். இந்த முறை அழ வைத்ததற்கு மன்னிக்கமாட்டாள். ஒரு வேளை அந்தச் சொக்குப்பொடி சிகாமணி சித்தார்த்தாவின் சினிமாவில் நடிக்கவும் சம்மதித்து விடுவாள். சந்தர்தான் இனி எஸ்.எஸ்.பி.யுடன் தனியாக மாரடிக்க வேண்டும். சுஜாதா போனது பெரிய இழப்புதான்.

நிஜமாகவே இழப்புத்தானா? சந்தருக்குச் சந்தேகம் வந்தது. இந்து மூன்று வருட காலத்தில் சுஜாதா அவனுக்காக நிறையத் தியாகங்கள் புரிந்திருக்கிறாள்— சந்தேகம் இல்லை. அவன் ஒன்றும் செய்யவில்லையா? அவள் இழுத்துப் போகாவிட்டால் அவன் பிரகாஷ் ராவின் கோணல் நாற்காலியில் உட்கார்ந்திருப்பானா? மூன்றடுக்கு மாடிக்கு மூச்சு முட்ட ஏறியிருப்பானா? தூணுக்குப் புடவை கட்டினால் திரும்பிப் பார்க்கும் ஒரு டைரக்டர் தன்னைத்

தூசி போல் உதறித் தள்ளக் காட்டிக் கொண்டிருப்பானா? பார்க்கப்போனால் இவ்வளவு நாட்களும் சுஜாதா நினைக்கச் சொன்னதைத் தவிர வேறு எதைத்தான் அவன் நினைக்கவும் செய்திருக்கிறான்? அவனாக அவன் எதைத்தான் செய்திருக்கிறான்?

சந்தர் வீட்டுக்குள் வந்து கதவைத் தாளிட்டான். அந்தச் சண்டை அவனுக்கும் சுஜாதாவுக்கும் நல்லது என்று தோன்றிற்று. இல்லாது போனால் இருவருமே ஆயுள் முழுவதும் கைக்குட்டை நழுவ விடுவதைக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கவேண்டும். இருவரும் கல்யாணம்கூடப் பண்ணிக் கொள்ள நேரிட்டிருக்கும். அப்படியும் ஆகிவிட்டால் இருவருக்கும் கதி மோட்சமே கிடையாது. நல்ல வேளை இனி அந்தப் பயம் இல்லை.

சந்தருக்கு இன்னொன்றும் தோன்றிற்று. இனிமேல் புடவைகளுக்கு அவன் இஸ்திரி போட வேண்டியிருக்காது.

1968

